12th February 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : தனிப்பட்டவர்கள் இந்தப் பாலிடெக்னிக்கை ஆரம்பிக்க முன் வருவார்களேயானால் அதற்கு எந்த அளவு உதவி கொடுக்கவேண்டும் என்பதைப்பற்றி ஒரு கொள்கை இப்பொழுது திட்டவட்டமாக வகுக்கப்பட்டிருக்கிறது. அதை யனுசரித்து யாராவது முன் வருவார்களேயானால் அந்த யோசனை ஆலோசிக்கப்பட்டு அது சரியான யோசனையாக இருந்தால் அதற்கு அனுமதி கொடுக்கப்படும்.

SRI V. K. KOTHANDARAMAN : ஏற்கனவே ஒரு பாலிடெக்னிக் வட ஆற்காடு ஜில்லாவில் ஆரம்பிக்க மத்திய சர்க்கார் 15 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருப்பதாகவும், அதில் 25 சத விகிதம் கொடுத்தால் அந்த ஜில்லாவில் ஆரம்பிக்கப்படும் என்கிற நோக்கத்தோடு 1958-ம் ஆண்டு ஜனவரி மாதம் 30-ந் தேதியில் வட ஆற்காடு கலெக்டர் தலைமையில் நடந்த ப்ளானிங் கமிட்டி கூட்டத்தில் அந்த 25 சத விகித ரூபாயைக் கொடுப்பதாக ராஜகோபால் நாயுடு அவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். தீர்மானமும் போட்டு அனுப்பப்பட்டிருக்கிறது. ஆகவே குடியாத்தத்தில் உடனடியாக ஒரு பாலிடெக்னிக் ஆரம்பிக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

* THE HON. SRI C. SUBRAMANIAM : 1958-ம் ஆண்டு ஜனவரி மாதம் 30-ந் தேதியில் என்றால் இப்பொழுது 12 நாட்கள்தான் ஆகிறது. இன்னும் அந்தத் தகவல் எங்களுக்கு வரவில்லை. தனிப்பட்டவர்கள் ஆரம்பித்தால், அது சரியான யோசனையாக இருந்தால் அதற்கு வேண்டிய உதவி செய்ய சர்க்கார் திட்டம் வகுத்துள்ளது. அத்துடன் கால்வாசி தொகை கொடுப்பதோடு மட்டுமில்லாமல் அதைத் தொடர்ந்து நடத்துவதற்கு அதற்கு வேண்டிய செலவையும் கொடுக்கத் தயாராயிருக்கவேண்டும்.

*Jamabandi at Bhavani.*

* 72 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of petitions given by the Harijans to the Jamabandi Officer at the time of jamabandi in 1957 in Bhavani taluk, Coimbatore district; and

(*b*) the number disposed of?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) The particulars have been called for from the Collector of Coimbatore.

இதற்கு வேண்டிய புள்ளி விவரங்களைக் கொடுக்கும்படியாக கலெக்டரைக் கேட்டிருக்கிறோம்.

SRI P. G. MANICKAM : ஹரிஜனங்கள் மனைக்கட்டு நிலங்கள் வேண்டுமென்றும், போதிய குடி தண்ணீர் வசதி செய்து தரவேண்டுமென்றும் விண்ணப்பித்திருக்கிறார்கள். அதை உடனடியாக விசாரித்து அதற்கு பரிகாரம் தேட முயற்சி எடுப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த விஷயம் அங்கத்தினர் கேள்வியில் இருந்தால் அதுவும் புள்ளிவிவரத்தில் வரும்.

*Oil refinery.*

* 73 *Q.*—SRI N. K. PALANISAMI AND SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to start an oil refinery in the State?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

SRI N. K. PALANISAMI : எண்ணை சுத்திகரிப்புச் சாலை ஏற்படுத்த தனிப்பட்டவர்கள் யாராவது சர்க்காரை அணுகினார்களா ? அப்படி அணுகினால் சர்க்கார் அதற்கு உதவி செய்வார்களா ?

[12th February 1958

THE HON. SRI R. VENKATARAMAN : 1956-ம் வருஷத்தில் "கான்ட்டினென்ட்டல் ஆயில் கம்பெனி" அதற்கு லைசென்ஸ் வேண்டுமென்று சென்னை அரசாங்கத்தைக் கேட்டார்கள். இது பொதுவாக, மத்திய சர்க்காரின் ஒரு கொள்கையில் வைக்கப்பட்டிருக்கிறது. க்ரூட் ஆயில் அஸ்ஸாமில் கிடைக்கிறது என்று பரிசீலனை செய்து அந்த இடத்தில் வைப்பது என்பதைப்பற்றி நிர்ணயம் செய்ய அவர்கள் உத்தேசித்தார்கள். அதன்படி அஸ்ஸாமிலும், பீஹாரிலும் "ரிபைனரீஸ்" வைப்பதாக உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

MR. SPEAKER : ரஷீத் அவர்களும் இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கிறார்கள். ஆகவே, அவர்களும் சப்ளிமென்ட்டரிஸ் கேட்கலாம்.

SRI A. A. RASHEED : When Bombay, Andhra and Assam States have got oil refineries, why should not the Madras Government press upon the Central Government the starting of an oil refinery in Madras also?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, there is absolutely no reason why there should not be an oil refinery in Madras. The dispersal is going on on a set pattern. They have fixed Assam and Bihar for the next stage of development of refinery.

SRI K. ANBAZHAGAN : எண்ணெ சுத்திகரிப்புத் தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கு எண்ணெ மூலப் பொருள்கள் சென்னை மாநிலத்தில் எங்காவது கிடைக்கிறதா என்று ஆராய ஏதாவது திட்டம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : இது விஷயமாகவுள்ள பூர்வாங்கப் பரிசீலனையில் இதற்கு ஆதாரம் இல்லை என்று தெரிகிறது. ஆனால் மேற்கொண்டும் பரிசீலனை நடக்கும்.

SRI A. GOVINDASAMY : அரசாங்கம் இத்தொழிலை எடுத்து நடத்தாவிட்டால் தனியார் இதை நடத்த முன் வந்தால் அவர்களுக்கு அரசாங்கம் உதவி செய்யுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : இது சாதாரண தொழில் அல்ல. இதற்கு க்ரூட் ஆயில் வேண்டும். இப்பொழுது க்ரூட் ஆயில் அஸ்ஸாமில் கிடைக்கிறது. இப்பொழுது இரண்டு ரிபைனரீஸ் போதும் என்று நிர்ணயித்திருக்கிறார்கள்.

*Devadasis.*

* 74 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to revive the system of Devadasis?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No Sir.

*Rearing of cocoons in Talavadi firka.*

* 75 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state the amount allotted for rearing cocoons for the production of raw silk in the Talavadi firka, Coimbatore district, out of the grant from the Central Silk Board in 1957?

THE HON. SRI R. VENKATARAMAN : No grant was received from the Central Silk Board for production of raw silk in Talavadi firka in 1957.